இடையேயும் நெருக்கமான தொடர்புகள் இருந்திட வேண்டும். **
மக்களுடன் வைத்துள்ள தொடர்புகளை விஸ்தரித்து கெட்டிப்படுத்துவது, மக்களின் குரலுக்கு செவிசாய்ப்பதற்கு தயாராகவும், விருப்புள்ளவர்களாகவும் இருப்பது— இதுதான் போல்ஷெவிக் தலைமையின் வல்லமை நிலைபெற்றிருக்கிறது, இதில் தான் அதன் நிச்சயமான வெற்றிக்கும் காரணம் உள்ளது. **

"மக்களிடமிருந்து பெற்று" எடுத்து, "மக்களிடம் திரும்பப் போதல்" என்கிற கொள்கையை அனுசரிக்க வேண்டும். இவ்விதமே திருப்திகரமானத் தலைமை வகித்து நடப்பது சாலவது **

"எல்லாம் மக்களுக்காகவே" என்கிற கோட்பாடும், மக்களிடம் பொறுப்புடன் நடந்துக் கொள்ள வேண்டுமென்கிற கோட்பாடும், மக்கள் தங்களைத் தாமே விடுதலை செய்து கொள்ள சக்தி பெற்றுள்ளனர் என்பதில் நம்பிக்கை கொண்டிருக்க வேண்டும் என்கிற கோட்பாடும் — மக்களிடம் கற்றுக் கொள்ள வேண்டும் என்கிற கோட்பாடும் ஆகியவையாவும் நமது வெகு ஜனரீதியான கோட்பாடுகளாகும் **

கட்சி என்பது மக்களின் ஒரு பகுதியே. மேலும் மக்களுக்கு சேவை செய்ய அது தன்னை அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறது. **

மக்களுடைய அவசரமான, தற்காலிகமான நலன்களுக்கும், அவர்களுடைய முழுமையான, நீண்ட காலத்திற்குரிய நலன்களுக்குமிடையே விரோதம் ஏற்பட்டால் ஒன்றிணைவை பார்த்து வைக்க ஈடுபட வேண்டும். அதற்கு காரணம் அதன் பொருள் என்னவென்றால் ஒரு சிறிய காரணம் பெரிய காரணத்துக்கு கீழ்ப்படிய வேண்டும், ஒரு சிறிய கோட்பாடு ஒரு பெரிய கோட்பாட்டிற்கு கீழ்ப்படுத்தப்பட வேண்டும். இதுக் கல் மறைந்து மாற்ற என்றாலும் ஸ்தூலமான நிலைகள் இருக்குமேயும் **

கல்வியறிவற்றவைப்பற்றி ஒரு அவசியத்தை தீவிர உணர்ச்சியும், சரியான கண்ணோட்டமும் கொண்டவர், வன்முறையற்ற வெற்றி செய்யாமல் மக்களை கொள்வாராகில் அவர்கள் மக்கள் இலட்சியத்தினிடம் பொறுப்பற்ற கண்ணோட்டத்துடன் நடந்து கொள்பவர் ஆவர் **

மேல் ஸ்தாபனங்களின் முடிவுகள், கட்டளைகள் இவைகளுக்கு தங்களுக்கு பொருத்தமானவற்றை நிறைவேற்றுவது, பிடிக்காதவற்றைப் புறக்கணித்து விடுவது. இது அப்பட்டமான சுயநலவாதம்; அனுமதிக்க முடியாதது; எந்த தாக்குப் போக்கு சொன்ன போதிலும் அனுமதிக்க முடியாதது. இரண்டாவது: மேலிட முடிவுகளும் கட்டளைகளும் நிலைமைக்குப் பொருந்தக் கூடியவை தானா என்றோ, நிலைமையால் நிலைவாங்கள் என்ன என்றோ ஆராய்ந்து பார்ப்பதற்கு முயற்சி செய்யாமல் இயந்திரத்தனமாக, யந்திரம் போல, அவற்றை நிறைவேற்றுவது: மனப்பூர்வமாக இல்லாது, இயந்திரத்தனமாக உயர்ந்த ஸ்தாபனத்தின் முடிவுகளையும் கட்டளைகளையும் நிறைவேற்றுவதாகும். எனவே, இதையும் அனுமதிக்க முடியாது. மூன்றாவது: ஒரு புறத்தில் முடிவுகளையும் கட்டளைகளையும் ஆராய்வது, மறுபுறத்தில் சூழ்நிலைகளையும் ஆராய்வது, எது சரியான சாத்தியமோ அதை நிறைவேற்றுவது, எது சரியல்ல சாத்தியமற்றதோ அதைப் பற்றி வாரியான காரணங்களை சொல்லி, திருத்தங்களை மேலே உயர்ந்த ஸ்தாபனத்துக்கு ரிப்போர்ட் செய்வது; இதுதான் புத்திசாலித்தனமாக, மனப்பூர்வமாக முடிவுகளையும் கட்டளைகளையும் நிறைவேற்றுவதாகும். இது ஒன்றே சரியான அணுகுமுறையாகும் **

கம்யூனிஸ சமுதாயத்தில் யாவும் யந்திரமயமாக்கப்படும். யாவும் யந்திரத்திலேயே உற்பத்தி செய்யப்படும். மனித சக்தியனைத்தும் யந்திரம் செய்து முடிப்பதால் மனிதனுக்கு வேலையை சுலபப்படுத்துகிறது. தொழில் நுணுக்க அறிவும் மனிதனின் வேலையை சுலபப்படுத்துகிறது." கம்யூனிஸ சமுதாயம் என்றால் தொழில்மய ஆதாரங்களும்